


## கனடாத் தமிழர் இணையம்

# அன்புக்கரங்கள்
# 2014

"போரினால் அழிக்கப்பட்ட பிரதேசங்களை மீள்கட்டியெழுப்பும்
துரித அபிவிருத்தி திட்டத்திற்காக நடாத்தப்படும் மாபெரும் நிகழ்வு"

**Canada Tamil Alliance**



# கனடாத் தமிழர் இணையம்

பெருமையுடன் நடாத்தும் தமிழ் விழா

# அன்புக்கரங்கள் - 2014

"போரினால் அழிக்கப்பட்ட பிரதேசங்களை மீள்கட்டியெழுப்பும்
துரித அபிவிருத்தி திட்டத்திற்காக நடாத்தப்படும் மாபெரும் நிகழ்வு"



**Peter & Paul Banquet Hall**
231 Milner Ave., Scarborough, ON
(Markham Rd. / Milner Ave.)

**April 20, 2014, Sunday**

**Canada Tamil Alliance 416.402.9393 / 647.766.7333**

"வேற்றுமையிலும், ஒற்றுமையாய் ஒருங்கிணைவோம் தமிழராய்"





# தமிழ்த்தாய் வாழ்த்து

வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழியவே!
வானமளந் தனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழியவே
ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழியவே
எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே
சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி ஓங்கத்
துலங்குக வையகமே
தொல்லை வினைதரு தொல்லை யகன்று
சுடர்க தமிழ் நாடே
வாழ்க தமிழ் மொழி வாழ்க தமிழ் மொழி
வாழ்க தமிழ் மொழியே
வானம் அறிந்தனைத்தும் அறிந்து
வளர்மொழி வாழியவே.





**O Canada!**
**Our home and native land!**

**True patriot love in all thy sons command.**

**With glowing hearts we see thee rise,**

**The True North strong and free!**

**From far and wide,**

**O Canada!**
**We stand on guard for thee.**

**God keep our land glorious and free!**

**O Canada!**
**we stand on guard for thee**





## தலைவர் அவர்களின் செய்தி

கனடா தமிழர் இணையம் உருவாக்கப்பெற்ற நோக்கத்தை சென்றடையும் முகமாக இந்த அன்புக்கரங்கள் நிகழ்வினை ஒழுங்கு செய்துள்ளோம். எமது மொழி, பண்பாடு, கலாச்சார விழுமியங்களை கனேடிய மண்ணில் பாதுகாப்பதோடு, சர்வதேச அரங்கில் எங்களது அடையாளங்களை பெருமைப்படுத்தும் முயற்சியை தொடரவேண்டும்.

அன்புக்கரங்கள் நிகழ்ச்சி ஊடாக நாம் சொல்லுகின்ற செய்தி என்னவென்றால், கனடிய மண்ணிலும், சர்வதேசத்திலும் பெருமை கொள் இனமாக எழுச்சி பெறவேண்டும். எனவே எங்கள் அடையாளத்தின் ஆணிவேர் எமது தாயகம். தமிழர் சமுதாயம் எழுச்சி பெறவேண்டும் என்ற நோக்காக தாயக கிராம அபிவிருத்தியை மையமாக கொண்டு இந்த நிகழ்வு உங்களை வந்தடைகின்றது.

சமூகமாற்றத்திற்கான ஓர் தேடலை தொடங்கியிருக்கின்றோம். அரசியல், சமூக, பொருளாதார மேம்பாட்டிற்கு தொடர்ந்து உழைத்திருக்கின்றோம். வேற்றுமையாலும், ஒற்றுமையாக தமிழுக்கு தொண்டு செய்வோம். அன்புக்கரங்கள் நிகழ்ச்சியூடாக கிடைக்கும் நிதிக்கொடைகள் போரினால் பாதிக்கப்பட்ட மக்களின் சமூக முன்னேற்றத்திற்காக பயன்படுத்த திட்டமிடப்பட்டுள்ளது. இந்த சமூக சேவைக்கு உங்கள் ஆதரவினையும் ஒத்துழைப்பினையும் தொடர்ந்தும் வழங்குமாறும் வேண்டுகின்றோம்.

கனடா தமிழர் இணையம் தொடர்ந்தும் கனடிய சமூகத்திற்கும், தாயகமக்களுக்கும், உலக தமிழ் சமூகத்திற்கும் தன்னலமற்ற சேவையை வழங்குவதற்கு அர்ப்பணிப்புடன் காத்திருக்கின்றது என்ற செய்தியை இங்கே பதிவு செய்வதோடு

"வளரும் தமிழ்கலைகள் வாழும் தமிழ் நாமம்
ஒன்றாய் கூடி மகிழ்வோம்"

**நாதன் வீரவாகு**
தலைவர்
கனடாத் தமிழர் இணையம்






Premier of Ontario - Première ministre de l'Ontario



April 20, 2014

## A PERSONAL MESSAGE FROM THE PREMIER

On behalf of the Government of Ontario, I am delighted to extend warm greetings to everyone attending Anpuk Karangal, hosted by the Canada Tamil Alliance.

As Ontarians, we believe in celebrating our uniqueness and embracing our diversity — diversity that gives us our strength, character and heart. The Tamil community is a valued part of that diversity, and I would like to take this opportunity to express my gratitude to members of the community for their outstanding contributions to our province.

I commend the Canada Tamil Alliance for hosting this event to raise funds to help build schools in Sri Lanka. Your vital work serves as a reminder that our world is made a better and more caring place by the commitment, benevolence and compassion of its people — especially Ontarians.

To those attending the event: you are to be commended for your generosity and goodwill. Your presence here this evening affirms the tremendous importance of being global citizens and assisting those in need.

Please accept my sincere best wishes for an enjoyable evening and a highly successful fundraiser.

**Kathleen Wynne**
**Premier**



2010ஆம் ஆண்டு நடாத்திய அன்புக்கரங்கள் நிகழ்வில் இருந்து சேகரிக்கப்பட்ட நிதி ரூபா ஒரு மில்லியனை வட பகுதி பிரதேசத்தில் யுத்தத்தினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவி தொகையாக வழங்கப்பட்டது






இந்த உதவி நிதியில் இருந்து பாதிக்கப்பட்ட பெண்களுக்கு தையல் இயந்திரம், மாணவர்களுக்கான பாடசாலை உபகரணங்கள், துவிச்சக்கர வண்டிகள் போன்றவை வழங்கப்பட்டன. இந்த உதவிகள் வன்னியில் உள்ள மாதர் அபிவிருத்தி சங்கங்கள் ஊடாகவும், பாராளு மன்ற உறுப்பினர்கள் ஊடாகவும், பிரதேச சபைகள் ஊடாகவும் மற்றும் அறவழி போராட்டக் குழு ஊடாகவும் வழங்கப்பட்டன.

இந்த உதவி நிதிக்கு அன்புக்கரங்கள் நீட்டிய அனைவருக்கும் கனடாத் தமிழர் இணையம் தனது மனமார்ந்த நன்றிகளை தெரிவித்துக்கொள்கின்றது






| | |
|---|---|
| உடன் மரக்கறிகள் | பூசை பொருட்கள் |
| ஆடு | புதிய பழைய படங்கள் |
| கோழி | தொலைபேசி அட்டைகள் |
| இலங்கை மீன் | மிளகாய்த் தூள் |
| நண்டு | மா |
| இறால் | அரிசி |

இறால் கணவாய் சுத்தம் செய்து கொடுக்கப்படும்

**Tamil, Telugu, Malayala, Hindi Video Cds, DVDs and MP3s**

**Get all types of groceries and essential items in good prices**







**SUN CITY PLAZA**

**Unit 18 2761 Markham Road, Scarborough, M1X1M4**

Between Mcnicoll & Finch at Markham and Nashdene
e-mail: shop@suncitymarket.com

**416- 724-6666**



# CANADA TAMIL ALLIANCE

# கனடா தமிழர் இணையம்

**தோற்றம்:**

கனடிய தமிழர்களை ஒருங்கிணைத்து, ஒரு குடையின்கீழ் கொண்டுவந்து தாயகத்தில் பாதிக்கப்பட்டு அல்லலுறும் நமது உடன் பிறப்புக்களுக்குத் தேவையான அடிப்படை வசதிகளை செய்து கொடுத்து, அவர்களுக்கு கிடைக்க வேண்டிய சுமுகமான தீர்வினைப் பெற்றுக் கொடுப்பதற்காகவும், சிறுவர்கள் முதல் முதியோர் வரை வாழ்வு மேம்படச் செய்யவும், கனடிய தேசிய நீரோட்டத்தில், அரசியல், சமூக, பொருளாதார மேம்பாட்டிற்காக ஒற்றுமையுடன் செயல்படவும், மக்களுக்கு நன்மை பயக்கும் திட்டங்களை எந்த ஒரு அமைப்பு முன்னெடுத்தாலும் அவர்களுடன் கை கோர்த்து அத்திட்டங்களை வெற்றியடையச் செய்யவும், கனடாவாழ் தமிழ் மக்கள், இளையோர் சமூகத்தின் பண்பாடு கலை கலாச்சார மேம்பாட்டிற்காகவும் கனடா தமிழர் இணையம் 2009ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்டது.

**நோக்கம்:**

1) **கனடிய தமிழ் அமைப்புக்கள், ஸ்தாபனங்களை ஒன்றிணைத்தல்.**
2) **கனடாவில் தமிழ் மொழி, கலை, கலாச்சார மேம்பாட்டினைப் பேணுதல்.**
3) **கனடிய தேசிய நீரோட்டத்தில் தமிழ் மக்களின் பங்களிப்பு.**
4) **தமிழ் கலாச்சார மையம் நிறுவுதல்.**
5) **கனடிய தமிழ் இளையோர், முதியோர் செயற்பாடு அபிவிருத்தித் திட்டம்.**
6) **தாயக மக்களின் தார்மீக சமூக அரசியல் பொருளாதார மேம்பாட்டிற்காக பாடுபடுதல்.**
7) **“தமிழர் உரிமை” என்ற குறிக்கோள் பேணுதல்.**

**இணையத்தின் அதிகார அமைப்பு:**

நிர்வாக சபை
தலைவர்
உப தலைவர்
செயலாளர்
உப செயலாளர்
பொருளாளர்
இணைப் பொருளாளர்
இணையப் பேச்சாளர்
தொண்டர் அணி
கணக்காய்வாளர்



# அன்புக்கரங்கள் 2014ன் விளக்கம்:

வடக்கு, கிழக்கு கிராம அபிவிருத்தித் திட்டம்
Development project of North and East Villages in Srilanka

முன் பள்ளி
**Pre-School**
**Library**
சமூக நூலகம்
**Free Tuition centre**
இலவசக் கல்வி போதனை நிலையம்
**Many More Urgent Need Project**
இன்னும் பல அவசரத் தேவையான திட்டங்கள்.





## செயலாளரிடமிருந்து...



**முகவுரை:**

2009 ஆம் ஆண்டு **"கனடா தமிழர் இணையம்"** கனடா வாழ் தமிழர்களின் விடா முயற்சியால் தோற்றுவிக்கப்பட்டு, கனடிய அரசின் பதிவு அதிகாரமும் பெற்றது. 2010 ஆம் ஆண்டு **"அன்புக்கரங்கள்"** எனும் கலை நிகழ்வை நடாத்தி அதன் மூலமாக சேர்க்கப்பட்ட தொகையில் புலத்தில் வாழும் தமிழ் சிறார்களுக்கு பள்ளிக்குத் தேவையான அடிப்படை உபகரணங்களை இலவசமாக வழங்கியதோடு மட்டுமல்லாமல், சிறு வியாபாரிகளுக்கு பைசைக்கிள், பெண்களுக்கு வீட்டில் இருந்து வருமானத்தை ஈட்டக்கூடிய தையல் இயந்திரம் போன்றவைகளை வழங்கி அவர்கள் வாழ்வை மேம்படச் செய்தது. நமது இணையத்தின் முக்கிய நோக்கம் என்னவெனில், உலகெங்கிலும் வாழும் நம் தமிழ் மக்களின் செயல் திட்டங்களை ஒன்று படுத்தி, எவ்வித பிரிவினை வாதமும், சுய நோக்கமுமில்லாமல் ஒருகுடையின் நிழலில் செயல்பட்டு, புலத்தில் வாழும் எம்மவர்களுக்கு நியாயமாய்க்கிடைக்க வேண்டிய அனைத்து அடிப்படை வசதிகளையும் செய்து கொடுப்பதுதான். **"கனடா தமிழர் இணையம்"** ஒரு அரசியல் அமைப்பு அல்ல. புலம் வாழ் எம்மவர்களின் நலனுக்காக குரல் எழுப்பி, புலம் பெயர் நாடுகளிடமும், தாயக அரசாங்கத்திடமுமிருந்து நீதியைப் பெற்றுத்தர எந்த ஒரு அமைப்பு முற்பட்டாலும் அவர்களுடன் துணை நின்று செயல் படுவதுதான் **"கனடா தமிழர் இணையம்"**.

**நடந்து முடிந்தவைகள்:**

முன் பத்தியில் கூறப்பட்டது போல 2010ஆம் ஆண்டு **"அன்புக்கரங்கள்"** ஈட்டிய நன்கொடைத் தொகையில் பல நல்ல திட்டங்களை நமது **"கனடா தமிழர் இணையம்"** நிறைவேற்றியது. அதைத் தொடர்ந்து புலம் பெயர் நாடுகளில் இயங்கி வரும் பல அமைப்புக்களுடன் இணைந்து (அரசியல் சார்ந்தவை / அரசியல் சாராதவை) செயல்பட்டு, புலத்தில் வாழும் அனாதை சிறுவர்கள், விதவைகள், காயப்பட்டு கை விடப்பட்ட யுவதிகள், இளம் வாலிபர்கள் ஆகியோருக்கு நியாயமாய்க் கிடைக்க வேண்டிய அனைத்து வசதிகளும் கிடைக்க உலக நாடுகள் வழி வகுக்க வேண்டும் என குரல் எழுப்பியது.

புலம் பெயர் தமிழர்கள் **"கனடா தமிழர் இணையம்"** உட்பட நிதி உதவி மட்டுமின்றி, தமிழரின் தாயகத்தை எப்படி மீள கட்டி எழுப்பலாம் என்று திட்டமிட்டு, பல புதிய தொழில் முயற்சிகளில் தாயக மக்களை ஊக்குவித்து அவர்களுக்குத் தேவையான பொருளாதார உதவிகளையும் **"கனடா தமிழர் இணையம்"** செய்துள்ளது.
கனடா வாழ் தமிழர்களிடையே பரஸ்பர ஒற்றுமையை வளர்த்து, அவர்கள் கனடிய அரசியல், பொருளாதார மேம்பாட்டுத் திட்டம் ஆகியவற்றில் பங்கு வகிக்கவும், பாரம்பரிய தமிழ் கலாச்சாரத்தை வளர்த்து கனடா வாழ் பல்லின மக்களும் எம்மவர்களோடு இணைந்து செயல்படவும் **"கனடா தமிழர் இணையம்"** பெரிதும் உதவியுள்ளது.

2013ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் தீபாவளி, கிறிஸ்து பிறப்பு நத்தார் ஆகிய விசேட தினங்களை நினைவு கூறும் வண்ணம் ஒரு ஒன்று கூடலை நிகழ்த்தி இராபோசன விருந்துடன் தமிழரின் ஒற்றுமையை உலகத்துக்கு எடுத்து காட்டியது நமது **"கனடா தமிழர் இணையம்"**.



2014ஆம் ஆண்டு சனவரி திங்கள் புத்தாண்டு தினத்தையும், உழவர் திருநாளாம் பொங்கல் தினத்தையும் சிறப்பிக்கும் வகையில் கனடாவில் இயங்கி வரும் அனைத்து அமைப்புகளையும் அழைத்து இராபோசன விருந்துடன் ஒன்று கூடல் நடாத்தி தமிழரின் ஒற்றுமையை வளர்த்துள்ளது நமது **“கனடா தமிழர் இணையம்”**.

## நடக்க இருப்பவைகள்:

20-4-2014 ஈஸ்டர் ஞாயிறு மாலை 6:00 மணிக்கு ஸ்கார்பரோவில் அமைந்துள்ள பீட்டர்ரூ போல் விழா மண்டபத்தில் “**கனடா தமிழர் இணையத்தின்**” 5ஆம் ஆண்டை முன்னிட்டு, “**அன்புக் கரங்கள் 2014**” என்னும் கலைவிழா ஒன்று ஒழுங்கு செய்யப்பட்டுள்ளது. அந்த விழாவில்தான் இம்மலர் வெளியிடப்பட்டு உங்கள் கரங்களில் தவழும். இவ்விழாவின் முக்கிய நோக்கம்: புலத்தில் வன்னிப் பகுதியில் முன் பள்ளி இல்லாமல் அல்லலுறும் சுமார் 600 க்கும் அதிகமான சின்னஞ் சிறார்களுக்கு ஒரு முன் பள்ளி அமைத்துக் கொடுக்கவும், உயர்நிலைப் பள்ளியில் கல்வி பயிலும் மாணவ, மாணவியர்களுக்கு ஒரு வாசக சாலை அமைத்துக் கொடுக்கவும் யாழ் மாகாண சபையுடன் இணைந்து திட்டமிடப்பட்டுள்ளது. இத்திட்டங்களை நிறைவேற்றி முடிக்க குறைந்த பட்சம் 50இ000 கனடிய டொலர்கள் தேவைப்படுகிறது. இத்தொகையை ஈட்டும் முகாந்தரமாகத்தான் “**அன்புக்கரங்கள் 2014**” என்னும் கலை விழா நிகழ்ச்சி நடைபெறுகிறது. உங்கள் உதவும் கரங்களை நீட்டி இவ்விழா சிறப்பாக நடக்கவும், நாம் திட்டமிட்டுள்ளபடி உதவித்தொகைகள் இதன் மூலம் கிடைத்து புலத்தில் முன்பள்ளியும், வாசகசாலையும் அமைத்துக் கொடுக்கப்படவும் **“கனடா தமிழர் இணையத்துடன்”** இணைந்து செயல்படுங்கள்.

கனடாவில் சீனர்கள் தங்கள் அடையாளங்களைக் காட்ட தங்களுடைய வர்த்தகப் பலகைகளில் சீன மொழியை மட்டுமே பயன்படுத்தி வருகிறார்கள். தங்களுக்கென்று சமூகக்கூடங்களை, விழா மண்டபங்களை கட்டியெழுப்பியுள்ளனர். இப்படியே பார்ப்போமானால் கனடாவாழ் பல்லின மக்கள் அனைவருமே தங்கள் கலாச்சாரத்தை வளர்ப்பதற்கென்று பள்ளிகளையும், சமூகக்கூடங்களையும், விழா மண்டபங்களையும் அமைத்துள்ளனர். தமிழர்களாகிய நாம் நமது இளைய தலைமுறைகளுக்கு ஞாபகார்த்தமாக என்ன செய்துள்ளோம்? இன்றும் எமது பிள்ளைகள் தமிழைப் பேசத்தெரியாதவர்களாகவும், எங்கள் கலாச்சாரங்களை மறந்தவர்களாகவுந்தான் வளருகிறார்கள். இந்நிலையை மாற்றியமைக்க “**கனடா தமிழர் இணையம்**” சில முன்னெடுப்புத்திட்டங்களை செயலாற்ற திட்டமிட்டுள்ளது. இத்திட்டங்கள் யாதெனில் 1) தமிழ் பள்ளிகளை நிறுவுதல், 2) தமிழ் வாசகசாலைகளை நிறுவுதல், 3) தமிழ் கலாச்சார மண்டபம் அமைத்தல் 4) தமிழர் விளையாட்டுத்திடல்கள் கட்டுதல்.

1) புலத்தில் தண்ணீர் வசதிக் குறைவான கிராமங்களில் “ஆழ் குழாய்” கிணறு அமைத்தல்,
2) உயர்நிலைப்பள்ளி மாணவ, மாணவியருக்கு இலவச போதனை வழங்கி அவர்களை அதிக மதிப்பெண்கள் பெறச்செய்தல்,
3) தங்கள் நிலங்களை பறி கொடுத்தவர்களுக்காக உள்நாட்டு அரசாங்கத்தோடு அறவழியில் பேச்சு வார்த்தைகள் நடாத்தி அவரவர்கள் நிலங்களை அவர்களுக்கே திரும்பக் கொடுக்கச் செய்யல்.
4) சிறு வியாபாரிகளுக்கு தங்கள் தொழிலை லாபகரமாய்ச் செய்ய சிறு ஊக்கத்தொகை வழங்குதல்.
5) அனாதை இல்லங்களில் தங்கியிருப்பவர்களை போஷிக்க உதவிகள் வழங்குதல்.

**வாழ்க வளமுடன்!**



# The Function of a Running Shoe



*The function of a running shoe is to protect the foot from the stress of running, while permitting you to achieve your maximum potential. Selecting the right shoe for your foot can be confusing without the proper knowledge.*

*People with low arches, called pronators, will need a shoe that provides stability. A shoe with good cushioning is important for people with high arches, called supinators.*

*There are three main features that you need to consider when selecting a running shoe: shape, construction, and midsole.*

*Shape. To determine the shape of the shoe, look at the sole. Draw a straight line from the middle of the heel to the top of the shoe. In a curve-shaped shoe, most comfortable for supinators, the line will pass through the outer half of the toes. A straight-shaped shoe will have a line that passes through the middle of the toes. These shoes are built to give pronators added stability.*

*Construction. Take out the insole and look at what type of stitching is used on the bottom. In board construction shoes, built specifically for pronators, the bottom of the shoe will not have any visible stitching. Combination shoes, appropriate for mild pronators or supinators, will have stitching that begins halfway. On slip-constructed shoes, you will see stitching running the entire length of the shoe providing the flexibility supinators need.*

*Midsole. Most of the cushioning and stability of a running shoe is determined by the midsole. A dual-density midsole provides shock absorption as well as some stability, perfect for pronators. Single density midsoles offer good cushioning but are not great at providing stability, making them better for supinators.*

*Keep in mind that a chiropractor can help you prevent running-related problems by assessing your gait, as well as the mobility of the joints in your feet, legs, pelvis and spine.*

*For more information on health and safety visit the Ontario Chiropractic Association, a voluntary professional association whose mission is to serve our members and the public by advancing the understanding and use of chiropractic care. http://www.chiropractic.on.ca/ or call 1877-327-2273.*

***Dr. George Traitses,***
*416-499-5656, www.infinite-health.com*

***Dr. George I. Traitses***
*D.C., B.Sc.(Hon.), M.Sc., C.H.N., C.N.M., A.C.R.B. 3, C.R.A.*
*2914 Sheppard Ave. E., Suite 206, Scarborough, Ont., Canada, M1T 3J4*






# Rajah Ram CATERERS

**Specializing in Sri Lankan & Indian Cuisine**

**"Excellence Through Professionalism,Quality Through Service"**

அறுசுவை உணவை ராஜரீதியில் பணிவுடன் படைத்திடுவோம்



தரமான பாகம் தவறாத நேரம் தரமோ நிரந்தரம்

**#20 - 589 Middlefield Road,**
**Scarborough, On M1G 4V6**
**Tele: 416 299 5200, 416 299 5004**
**Fax: 416 299 5795**



# கிராமிய அபிவிருத்தி திட்டத்தில் மக்களின் அடிப்படைத் தேவைகள்
# The Development Project for Basic Needs to the Rural People



குடிநீர் விநியோகமும் அதன் கட்டுமானமும்
*The Water Supply and Infrastructure*



மலசலகூட வசதிகள்
*Sanitation Facilities*



சிறுவர்களுக்கான முன்பள்ளியும் அதன் செயல்பாடுகளும்
*Preschool for Children and Activities*



மக்களுக்கான சமூகநூலகம்
*Public Library*

*எம் மக்களும் வளமான எதிர்கால வாழ்வும்,*
*கனேடிய மக்களின் பங்களிப்புடன் கூடிய ஒருங்கிணைப்பு செயல் திட்டங்கள்*





# கனடாத் தமிழர் இணையம் ஸ்காபரோவில் நடாத்தும் அன்புக்கரங்கள்

தாயகத்தில் வடக்கிலும் கிழக்கிலும் உள்ள கிராமங்களில் அபிவிருத்தித் திட்டங்களை மேற்கொள்ளும் அடிப்படையில் அமைக்கப்பட்டதே "கனடாத் தமிழர் இணையம்" ஆகும். கனடா அரசின் அங்கீகாரமும், அரசபதிவும் கொண்டதாக இவ்வமைப்பு செயற்பட்டுவருகின்றது. இவ்வமைப்பின் முக்கிய குறிக்கோள்களாக் கனடாவில் இயங்கும் அனைத்துத் தமிழர் அமைப்புக்களையும் ஒன்றிணைத்தல், தமிழ்மொழி–கலை - கலாச்சார மேம்பாட்டினைப் பேணுதல், தமிழ்க் கலாச்சார மண்டபம் ஒன்றை அமைத்தல், கனடாத் தமிழ் இளையோர், முதியோர் நலன்களைப் பேணும் செயல்திட்டங்கள் எனப் பல்வேறு நல்ல நோக்கங்களுடன் அரசில் சார்பற்ற ஒர் அமைப்பாகக் கனடாத் தமிழர் இணையம் செய்றபட்டு வருகிறன்றது.

2010 ஆம் ஆண்டு நடத்திய "அன்புக் கரங்கள்" கலைநிகழ்ச்சி மூலம் சேகரித்த நிதியின் மூலம் தாயகத்தில் வசதியற்று வாழும் பள்ளிச்சிறுவர்களுக்கான அடிப்படை உபகரணங்களை வழங்கி அவர்களது கல்விக்கு வசதிகள் செய்தோம். சிறு வியாபாரம் செய்து வாழ்க்கையை நடாத்தும் வியாபாரிகளுக்கு துவிச்சக்கரவண்டிகள் வழங்கப்பட்டன. போர் அனர்த்தங்களால் காயப்பட்ட பாதிக்கப்பட்ட பெண்களுக்கு தையல் இயந்திரங்கள் வழங்கி அவர்களது வாழ்வுக்கு ஊதியம் பெறத்தக்க உதவிகள் செய்து கொடுக்கப்பட்டன .

வடக்கு, கிழக்கு முன் பள்ளி (Pre-School) சமூக நூலகம், இலவசக்கல்வி போதனை நிலையம் (Free Tuition centres) அமைத்தல், அவ்வப்போது ஏற்படும் பல்வேறு அவசரத் தேவைகளை (Urgent Need Projects) நிவிர்த்திசெய்யும் திட்டங்கள் என்பவற்றை முன்வைத்து கனடாத் தமிழர் இணையம் செயற்பட்டு வருகின்றது. 'அன்புக்கரங்கள்- 2014' நிதி சேகரிப்பு கலைநிகழ்ச்சி மூலம் பெற்றுக்கொள்ளலாம் என்ற நம்பிக்கையுடன் இந்த அமைப்பாளர்கள் செயற்படுகிறார்கள். தாயகத்தில் கல்விச் சூழலில் வாய்ப்பு வசதிகள் இல்லாது பின்தங்கிய நிலையில் அல்லலுறும் மாணவர்களின் தேவைகளை உடனடியாகப் பூர்த்தி செய்யும் அடிப்படையில் உங்களது அன்புக்கரங்களை நீட்டுங்கள் எனக் கேட்டுக்கொள்கிறோம்.

அன்புக்கரங்கள் கலைநிகழ்ச்சியில் ஆடல், பாடல் முதலான பல்சுவைநிகழ்ச்சிகள் இடம் பெறுகின்றன. சண் யூனியர் சிங்கர் புகழ் பிரவீன் மற்றும் கனேடிய கலைஞர்களின் இன்னிசை நிகழ்ச்சிகளும் இடம்பெறுகின்றன. அனைத்து இசைநிகழ்ச்சிகளும் சுப்பர் சண்ஸ் பயாஸின் இன்னிசை வார்ப்புகளுடன் இடம்பெறவுள்ளன. என்பதையும் நினைவுபடுத்த விரும்புகின்றோம். நிதிசேகரிபபுக்கான இக்கலைநிகழ்ச்சியில் கனடாவின் முன்னணி பரதநாட்டியக் கலைஞர்வரிசையில் இடம்பெறும் திருமதி. ஜெனனிக்குமார், திருமதி. சிவா திவ்யராஜா ஆகியோரின் மாணவர்களது நடனநிகழ்ச்சிகளும் இடம்பெறவுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.

இக்கலைநிகழ்ச்சிக்குரிய அனுமதிச் சீட்டின் மூலம் பெறப்படும் தொகையுடன் தாயக உணர்வாளர்களது அன்புக் கரங்களையும் எதிர்பார்க்கின்றோம். தனிநபராகவும், குடும்பமாகவும் நன்கொடை வழங்கி தங்கள் பெயர்களையும் இத்திட்டங்களில் சேர்த்துக்கொள்ள வாய்ப்புண்டு. கலைநிகழ்ச்சி நிகழ்த்துவதென்பது நிதிச்



செலவுடையது என்பது யாவரும் அறிந்ததாகும். இந்நிலையில் இவ்விழா நடைபெறும் கலைவிழா மண்டபவாடகை, அலங்காரிப்பு, ஒலிபெருக்கி அமைப்பு, கலைஞர்கள் செலவு, விளம்பரச் செலவுகள் ஆகியனவற்றில் ஏதாவதொன்றினைப் பொறுப்பேற்று நிதி சேகரிப்புக்கு நீங்கள் உதவி செய்ய முன்வருமாறு கேட்டுக்கொள்கிறோம். வர்த்தகப் பெருமக்கள் தங்கள் விளம்பரங்களை இவ்விழாச் சிறப்புமலரில் பிரசுரிப்பதன் மூலம் பெறப்படும் நிதியும் எமது நிதி சேகரிப்புக்குத் துணையாகலாம். எனவே வர்த்தகப் பெருமக்கள் மனம் உவந்து முன்வந்து அன்புக்கரங்கள் முன்னெடுக்கும் பணிகளில் சேர்ந்து, தாயக மாணவர்களின் முன்னேற்றப் பணிகளில் சார்ந்த திட்டத்திற்கு எங்களுடன் தொடர்புகொண்டு பங்களிப்பு நல்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.





# JRS College
of Business and Health Care Inc.

"Committed to providing quality training"

We offer Free Computer Basic Class Every Month.

## DIPLOMA PROGRAMS

| | |
|---|---|
| -Community Service Worker | (45 Weeks) |
| -Pharmacy Assistant | (46 Weeks) |
| -Personal Support Worker | (24 Weeks) |
| -Accounting &Payroll Administration | (45 Weeks) |
| -Early Childcare Assistant | (36 Weeks) |
| -Health Office Administrator | (40 Weeks) |
| -Computerized Accounting | (24 Weeks) |
| -Office Assistant | (16 Weeks) |
| -Accounting & Payroll Administration -Part time | (50 Weeks) |
| -Personal Support Worker - Part time | (35 Weeks) |



## Certificate Courses

- Accpac
- Business Communication
- Cashier
- Bank Teller
- Food Service Worker
- Payroll
- Food Handler
- Simply Accounting
- Ms Office
- QuickBooks

## FINANCIAL AID

Financial Assistance available for those who qualify:

-Receiving EI (Unemployment)
-Received EI within last 3 years
-Received Maternity leave within 5 years
-Social Assistance recipient

(Registered as a Private Career College under the Private Career Colleges Act 2005.)

## Contact Info

(Midland & Finch)
330-4168 Finch Avenue East
Scarborough, ON M1S 5H6

**416-292-2455**

E-Mail: info@jrscollege.ca
Web: www.jrscollege.ca
Fax: (416) 292-2455









**ஜுடி ஞானேந்திரன்**
Sales Representative
**416.629.9797**

**ஞானேந்திரன் நரசிங்கம்**
Sales Representative
**416.937.8090**

# To Buy or Sell Home, Business & Investment properties.



HOMELIFE GTA REALTY INC., 5215 Finch Ave. E.Suite, Unit 203, TORONTO, ON. M1S 0C2



# RAMAN HOME COMFORT INC

## CENTRAL VACUUM










eureka!

Invented for the way you clean

உபகரணங்கள் நகரிலேயே
மிகச்சிறந்த விலையில்...

www.ramanhomecomfort.com

Raman Home Comfort Inc

- Electrolux Central Vacuum 
- Gives you more fresh air to breath 
- Reduces Carbon Footprints 
- Adds value to your house 
- Available in different Models 



6055 Steeles Ave. East, Unit # C105
Scarborough, ON M1X 0A7
(W) 416-332-2989
(F) 416-332-4967

**RamanChelliah**
Sales Person

Direct: 647-893-4414

E-mail:info@ramanhomecomfort.com

ரொரன்ரோ மாநகரம் முழுவதும் அனைத்துச் சமூகத்தினருக்கும் திருப்திகரமான சேவையை வழங்கி வரும் **Raman Chelliah**வை நாடுங்கள்.

**1-888-472-6265**





## "பகுத்து அறிந்திடல் அற்றாய் போலும்"!

பண்டைக் காலம் முதலே பண்பட்ட உள்ளம், நட்புறவினைப் பேணும் பண்பு, உற்றாரை அரவணைக்கும் அன்பு, ஆபத்துக்கு உதவும் தர்ம சிந்தனை, பக்தி, கருணை, ஜீவ காருண்யம் ஆகியவற்றினைக் கொண்டிருந்த அரிய சமுதாயம் எமது தமிழ் சமுதாயம். தமிழ் மன்னர்களும் நாட்டுக்கும், தமிழினத்துக் கும் நன்மையே ஏற்படும் வகையில் நல்லாட்சி புரிந்து வந்தனர். அதனால் தமிழ் நாட்டில் சூது, வாது, உறுபகை எதுவுமே இன்றி தமிழினம் ஒரே குடும்பம் போன்று உல்லாசமாக வாழ்ந்து மகிழ்ந்திருந்தது. நண்பர்கள் கூட உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற பாகுபாடின்றி பண்புடன் தமது நட்பினை வாழ்நாள் முழுதும் பேணிப் பெருமகிழ்வு உற்றிருந்தனர்.

அவ்வாறு தமது இளமைக் காலத்து பள்ளிக் கூட நட்புறவினை பல்லாண்டுகள் கழிந்த பின்னரும் அரசன் ஆண்டி என்ற பேதம் பாராட்டாது பேணிக்காத்த பெருமை துவாரகாபுரி மன்னனான கிருஷ்ணனுக்கும், வறுமையினால் ஆண்டியான குசேலருக்கும் உண்டு. ஆண்டியாய் இருந்ததனால் ஆடம்பர வாழ்வு வாழ்ந்து வரும் அரசனான தனது நண்பனைக் காண்பதையே தவிர்த்து வந்தார் குசேலர். ஆனால் அவரது இருபத்தியேழு குழந்தைகளும் பட்டினியால் வாடித் துடிப்பதை பெற்ற அன்னையால் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. அரசனாக இருக்கும் உங்களது நண்பரிடம் சென்று உதவி கேட்டால் என்ன? என குசேலரை நிர்ப்பந்தித்தாள் மனைவி. வேறு வழியின்றி கூச்சத்துடன் துவாரகாபுரி அரண் மனையை நோக்கி நடந்தார் குசேலர்.

அரையிலே அழுக்கேறி, கிழிந்து ஆயிரம் கண்களையுடைய கந்தைத் துணி, சவரம் செய்யாது அடர் ந்து வளர்ந்து திரண்டு, சுருண்டு அழுக்குற்றிருக்கும் தலைமுடியும், தாடியும். அந்த அருவருக்கத்தக்க கிழட்டு உருவம் தனக்கு அண்மையில் வருவதையே விரும்பாத அரண்மனை வாயிற் காவற்காரன் நில் அங்கே! என உரத்த குரலில் உத்தரவு பிறப்பிக்கின்றான். யார் நீ ? எங்கே செல்கின்றாய்? என அடுக் கடுக்காய் கேள்விக் கணை தொடுத்தான்.

மன்னரைப் பார்க்க வேண்டும் என தளர்ந்த குரலில் தட்டுத் தடுமாறி பதில் வந்தது.

அசுத்தமே படியாத பளிங்கு மாளிகையில் பரிசுத்தராய் பல்வேறு உலகத்தினரும் பாராட்டும் வகையிலும், எதிர்க்கும் எதிரிகளை எமன் உலகத்துக்கும் அனுப்பி வைக்கும் வீராதி தீரத்துடனும் அரியாசன த்தில் இருந்து அரசாழும் மன்னரைப் பார்ப்பதற்கு எத்தகைய தகுதி வேண்டும் என்பதையே உணராது அழுக்குப் படிந்த உடலுடனும், கந்தல் ஆடையுடனும் வந்திருக்கும் உன்னை நான் உள்ளே விடுவதா? நடக்கவே நடக்காது! உனக்கு அறிவென்பதே கிடையாது. ஆனால் வயது தான் அதிகரித்திருக்கிறது என ஆணவத்துடன் அறுதியிட்டுக் கூறுகின்றான் வாயில் காவலாளி. இக்காட்சியினை தத்ரூபமாகச் சித்தரிக்கின்றது குசேலபாக்கியானத்தில் உள்ள பின்வரும் பாடல்.



வகுத்த பல்லுலகும் போற்ற மாற்றலர் கூற்றூர் மேவ
செகுத்து அரசாளும் கண்ணச் செம்மலெங்கே நீயெங்கே
இகுத்த பல்துவாரக் கந்தை ஏழைப் பார்ப்பானே நீ
பகுத்தறிந்திடல் அற்றாய் கொல் பயனில் மூப்படைந்தாய் போலும்.

வாயிற் காவலாளி வாயினால் தூற்றிய போதும் வந்த காரியத்தை கைவிட்டு வெறுங் கையுடன் திரும்ப விரும்பாத குசேலர். இளமைக் காலத்தில் தங்களுடன் கல்வி பயின்ற குசேலர் என்பவர் தங்களைக் காண வந்திருப்பதாக உனது மன்னனிடம் கூறு. அவரது பதிலைக் கேட்டுவிட்டுத் தான் நான் செல்வேன் என அடம் பிடித்தார் குசேலர்.

நான் திரும்பி வரும் வரை இவனை உள்ளே செல்ல அனுமதிக்காதே என மற்றைய காவலாளியிடம் கூறிவிட்டு உள்ளே சென்று மன்னரிடம் பின்வருமாறு தகவல் தெரிவித்தான்.

ஆதி நாளைய நின்னோடு அருங்கலை கற்றுளனாம்
போதவும் சிறந்த நட்பு பூண்டு கொண்டவனாம்
கந்தை மேதகக் கொண்ட நீரான்
குசேலன் என்று இயம்பினான் பேர்.

காவலாளியின் மூலம் குசேலன் என்ற பெயரினைக் கேட்டதுமே மன்னனான கண்ணன் தாயார் வருவதை அறிந்து ஆனந்திக்கும் குழந்தையைப் போன்று உணற்சி பொங்க ஆசனத்தை விட்டெழுந்து அகம் மிக மகிழ்ந்து விரைவாக அவரை உள்ளே அழைத்து வா என உத்தரவிட்டார்.

தாயது வருகை கேட்ட தனியிளம் குழவி போன்று
நேயமிக் குடையனாகி நெஞ்சினுள் உவகை பூப்ப
போயழைத் திடுமினின்னே போயழைத் திடுமினின்னே
எனப் புகலலுற்றான்.

அவரது செய்கை கண்டு அதிசயித்த காவலாளி தனது ஆணவத்தை அடக்கி அரண்மனை வாயிலுக்குச் சென்று, முதலில் ஏழைப் பார்ப்பானே என இகழ்ந்து பேசிய காவலாளி குசேலரைப் பார்த்து “மன்னர் தங்களை அழைத்து வருமாறு பணித்துள்ளார்” என பணிவுடன் பகன்று உள்ளே அழைத்துச் சென்றான்.

இதே பண்டைய தரித்திர குசேலபாக்கிய படலம் தான் இன்றைய ஈழத் தமிழர்களின் வாழ்விலும் நிகழ் ந்து கொண்டிருக்கின்றது. பரம்பரை பரம்பரையாக வாழ்ந்து வந்த வீடுகளில் இருந்து வெளியேற்றப்பட்டு, வெறுங் கைகளுடனும்,வெறும் வயிறுகளுடனும் வீதிகளில் கந்தல் ஆடைகளுடனும், பசியுடனும் அலை ந்து திரியும் குசேலர்கள் எத்தனை பேர்? இரக்க சிந்தையாலும், தயாள சிந்தையுடனும் அவர்களை அரவணைத்து அநாதை மடங்களில் தங்க வைத்துள்ள **“அன்புக் கரங்களுக்கு”** ஆதரவு அளிக்க வேண்டியது நமது தலையாய தர்மப் பணியல்லவா? சிறு துளி நிதி உதவிகள் பெரு வெள்ளமாகப் பெருக் கெடுத்து அவர்களது கொதிக்கும் வயிறுகளை குளிர்விக்க வேண்டாமா?



பணவசதியினாலும், பிறர் உதவியினாலும் ஏற்கனவே வெளிநாடுகளுக்குப் புலம் பெயர்ந்து, கஷ்டப் பட்டு உழைத்து வீடு வாசல்கள், வாகனங்களுடன் வசதியான வாழ்வு வாழும் கண்ணபிரான்கள் எத்தனை பேர்? உங்களுடன் இளமைக் காலத்தில் கல்வி கற்ற, உற்ற நண்பர்களாகத் திகழ்ந்த மற்றும் உங்கள் உறவினர்களாக கூடிக் குலாவிய குசேலர்களை ஒருகணம் எண்ணிப் பார்க்க வேண்டாமா? அவர்கள் இன்று எத்தகைய அல்லலுறு வாழ்க்கை வாழ்கின்றனர் என்பதனை பகுத்தறிவோடு பகுத்து அறிந்து கொள்ள வேண்டாமா? கனடா, பிரான்ஸ், ஜெர்மனி, சுவிஸ், நோர்வே என வகுக்கப்பட்ட பல் உலகிலும் பரந்து பட்டு வாழும் நீங்கள் அவர்களது நிலையினை எண்ணிப் பார்க்க வேண்டாமா?

இப்பிறவியில் நாம் அனுபவித்து வரும் செல்வம் எதுவுமே மறுபிறவியில் எம்மைத் தொடர்ந்து வரப் போவதில்லை. ஆனால் நாம் செய்யும் அற்ப சொற்ப தர்மமே இப்பிறப்பொழிய இன்னும் ஏழேழு பிறப்பு வரை தொடர்ந்து வரும் என்பது எமது அனுபவசாலிகளான ஆன்றோர் கூறி வைத்த மறுக்க முடியாத உண்மைத் தத்துவம். பணம் இல்லை என்ற குறையோ, முறைப்பாடோ தேவையில்லை. எப்பாடு பட்டா வது உதவி செய்ய வேண்டும் என்ற மனம் இருந்தால் போதும். துடிக்கும் எமது இதயத்தில் இருந்து **"எமது உடன் பிறப்புகளுக்கு எம்மால் இயன்றளவு உதவி செய் வேண்டும்"** என்ற அந்த துடிப்பு எழு ந்து விட்டால், நொடிப் பொழுதில் எமது உடன் பிறப்புக்களின் இன்னல்களைத் துடைத்து இன்புற்று வாழ வழி செய்து விடலாம்.

"தர்மம் தலை காக்கும்! தக்க சமயத்தில் உயிர் காப்போம்"!

***வீரகேசரி மூர்த்தி***





கனடிய மண்ணில் புதிதாய் துளிர் விடும்
சமூக இலக்கிய காலாண்டு
தமிழ் சஞ்சிகை

# துளிர்




Tel: 647 657 0910
647 345 3022
Fax: 647 345 3022
thalir.thalir@yahoo.ca
www.thalirrythem.com
43 Andover Cresent, Scarborough, ON. M1E 2X2





புரண்டு படுத்தால்
நாம் இறந்துவிடுவோமோ
என்று கருவில் இருந்த
நமக்காக தூக்கத்தை
கூட தொலைத்து
விட்டு இரவில்
விழித்திருந்த
சூரியன்

ORU நாள்
ORU கவிதை

"அம்மா"



# Pooja Stores

*We specialize in all your pooja needs*



சகல விதமான பூஜைப் பொருட்களும் இங்கே கிடைக்கும்

**1209 ELLESMERE ROAD**
**SCARBOROUGH ON M1P 2Y3**
**416 752 3112**



Take out & Catering



Weddings

Birthdays

Anniversary

Anthiyedi

Coming of Age

all your special occasions

**5790 Sheppard Ave. E Unit #3**
**Scarborough, ON M1B 5J6**

**Tel: 416 299 4541**
**Cel: 647 293 6634**



# வருமானம் பெருக வளமான வழிகள்...

நமக்கு நம்பிக்கை தருகிற முக்கியமான அம்சங்களில், முன்னணியில் இருப்பது வருமானம். நிறைய மனிதர்களின் அகராதியில், அதிக வருமானமென்றால் வேலைக்குப் போகாமல் காலாட்டிக் கொண்டே இருந்தாலும் வந்து சேரகின்ற பணம் என்றொரு பொருள் இருக்கிறது. வருமானத்திறகான வழிகளைப் பெருக்கிய பிறகு இப்படியொரு நிலை உருவாகும் என்பது உண்மைதான். ஆனால், ஆரம்பநிலைகளில், வருமானம் பெருக்கி வளமான வாழ்வு வேண்டுமென்றால், அதற்கு வேறொரு மனநிலையும் அணுகுமுறையும் அவசியமாகிறது.

இந்த இரண்டு கேள்விகளுமே ஒன்றுக்கொன்று தொடர்புடயவை. ஏனென்றால், நீங்கள் செய்கின்ற வேலையை நீங்கள் நேசித்தால் மட்டும் போதாது. உங்கள் திறமையை அது முழுகமயாக வெளிக்கொணர்வதாகவும் இருக்க வேண்டும். செய்வதற்கு சவாலான வேலையை செய்தால் அந்த சவாலான வேலை மீது ஆளுமை வளரும். அந்த சவாலை சுகமான அனுபவமாய் மாறி உங்கள் திறமைகள வளர்ப்பதோடு வருமானத்தையும் வளர்க்கும். இதற்கு மிக முக்கியமான ஒன்றையும் தொடர்ந்து மேற்கொள்ள வேண்டும். உங்கள் திறமையை வளர்ததெடுக்கும் பயலைரங்குகளில் வழிகாட்டும்.

இந்தகட்டுரையின் தலைப்பு, “வருமானம் பெருக வளமான வழிகள்” என்று இருக்கிறது. “பணம்” என்ற சொல்லையும் “வளம்” என்ற சொல்லையும் எடுத்துக்கொள்ளுங்கள். பணம் மட்டுவம வளம் அல்ல. உங்கள் சேமிப்புதான் வளத்தின் அளவென்றால், ஒவ்வோர் எறும்பும் உங்களைவிட வளமாகவே இருக்கிறது. உணவு, உடை, வீடு, வாகனம், சொத்து, இவற்றைவிட முக்கியமாய் சந்தோஷம் – இவையெல்லாம் சேர்ந்த வாழ்வுக்குத்தான் வளமான வாழ்வு என்று பெயர். பலர் கணிசமான அளவு பணம் சேர்த்துவிட்டு, அதனை மொத்தமாய் வங்கியில் போட்டுவிட்டு, உணவில் தொடங்கி எல்லாவற்றிலும் கடும் சிக்கனம் காட்டி கைக்கும் வாய்க்கும் பற்றாமலேயே போராடிக் கொண்டிருப்பார்கள்.

இவர்களால், வாழ்க்கையையோ, பணத்தையோ அனுபவிக்க முடியாது. அதனாலேயே ஒரளவுக்கு மேல் வருமானத்தையும் பெருக்க முடியாது. பணத்தை மனதுக்கும் கைகளுக்கும் நெருக்கமாக வைத்திருப்பவர்களே வளமுடன் வாழ்கிறார்கள். பணத்தைப் பார்த்து பயந்து கையாளத் தெரியாமல் மிரண்டு, பூட்டி வைப்பவர்கள் வளத்தை ஒருபோதும் அனுபவிப்பதில்லை.

தன்னை ரசித்து, நிறைய சம்பாதித்து, போதுமான அளவு யார் பயன்படுத்துகிறார்களோ அவர்களிடமே பணம் சேர்கிறது. நீங்கள் கூர்மையாகப் பார்த்தால், கீழை நாடுகளில் தோன்றிய நீதி இலக்கியங்கள் எல்லாமே, பணத்தை எப்படிப் பயன்படுத்துவது என்றுதான் நீளமாகப் பேசியுள்ளனவே தவிர பணம் பண்ணுவதைப் பற்றி அவை நேரடிக் குறிப்புகளை நிறைய வழங்கவில்லை. என்ன காரணமென்றால், இருக்கிற பணத்தை முறையாகப் பயன்படுத்தத் தெரிந்தவர்களிடம் இயல்பாகவே பணம் பெருகும் என்பதை அந்த அறிஞர்கள் நன்றாக உணர்ந்திருந்தார்கள்.

வருமானம் பெருக வேண்டும் என்கிற எண்ணம் யாருக்கெல்லாம் இருக்கிறதோ, அவர்கள் நினைவு வைத்துக் கொள்ள வேண்டிய முக்கியமான ஒன்று, “பணம் என்பது, நிபுணத்துவத்திற்குத் தரப்படுகிறஅங்கீகாரம்”. நீங்கள் வெளிப்படுத்தும் தனிப்பட்ட திறமையாக இருந்தாலும் சரி, செய்யும் தொழிலாக இருந்தாலும் சரி, அதற்குத் தரப்படுகிற அங்கீகாரமே பணம்.



இதற்கு நீங்கள் பெரிய பெரிய உதாரணங்களைத்தான் தேட வேண்டும் என்பதில்லை. சின்ன வயதில் உங்கள் பெற்றோரின் பிறந்த நாளுக்கோ திருமண நாளுக்கோ ஏதாவது பரிசு கொடுக்க நினைத்திருப்பீர்கள். கையில் காசு இருந்திருக்காது. உங்கள் பிஞ்சுக் கைகளால் ஓர் ஓவியம் வரைந்தோ கைவினைப் பொருள் ஒன்று செய்தோ கொடுத்திருப்பீர்கள். உங்கள் பெற்றோர் மகிழ்ந்து நூறு ரூபாய் தந்திருப்பார்கள். இவை இரண்டுமே பாசத்தின் பரிமாற்றம்தான். ஆனாலும் நீங்கள் சரியான தருணத்தில், சரியான இடத்தில் வெளிப்படுத்திய திறமை ஒரு வெகுமதியை பெற்றுத் தந்தது.

நம்பகத்தன்மைக்கும் நிபுணத்துவத்துக்கும் வேண்டிய விலையைக் கொடுக்க இந்த சமூகம் எப்போதுமே தயாராகத்தான் இருந்து கொண்டிருக்கிறது.

உங்கள் திறமை அளக்கத்தக்கதாக இருக்கும்போதும், திறமையின் வெளிப்பாடு கண்கூடான பலனைக் கொடுக்கும்போதும் உங்கள் வெற்றி உறுதி செய்யப்படுகிறது. வாழ்வில் மகிழ்ச்சியாய் இருக்கவேண்டும் என்பதை முதன்மை நோக்கமாக வகுத்துக் கொள்பவர்கள் உண்டு. ஆனால் வெற்றிகரமாக இருக்க வேண்டும், சாதிப்பவராக இருக்கவேண்டும், பயனுள்ளவராக இருக்கவேண்டும் என்று நினைப்பவர்கள் வாழ்வில் மகிழ்ச்சியானவர்களாகவும் மலர்ந்து விடுகிறார்கள். அளக்கத்தக்க திறமை, ஜெயித்துக் காட்டும் சக்தி, இரண்டும் சேரும்போது வருமானம் பெருகி வளமாக வாழமுடிகிறது.

ஆனால் வாழ்க்கை என்கிற வட்டத்தில் வாய்ப்பு ஒவ்வொருவருக்கும் இருக்கிறது. தயக்கம் காரணமாகவோ திட்டமிடாமை காரணமாகவோ உங்கள் பங்கேற்பை மிகக் குறைவாக வைத்துக்கொண்டு, பார்வையாளர்கள் வரிசையில் அமர முடிவு செய்து விட்டீர்கள் என்றால், நீங்கள் வெற்றியாளர்களை வேடிக்கை பார்த்துக் கொண்டே இருப்பீர்களே தவிர உங்கள் திறமையை வெளிப்படுத்தி வெகுமதிகளை அள்ளிச்செல்லும் வாய்ப்பை இழந்துவிடுவீர்கள்.

எனவே, இதுவரை பார்த்த விஷயங்களின் இன்றியமையாத பகுதிகளைத் தொகுத்துப் பார்க்கலாம்.

- ☑ உங்களுக்கு நன்கு தெரிந்த தொழிலையோ பணியையோ முழு வீச்சில் செய்து, அதில் முதன்மையாக வாருங்கள்.
- ☑ நீங்கள் நேசித்துச் செய்த – பணியில் ஈட்டிய பணத்தை முறையாக முதலீடு செய்யுங்கள்.
- ☑ பணத்தைப் பார்த்து மிரளாமல், அதனுடன் நெருக்கமான தோழமை கொண்டு அதனைப் பயனுள்ள முறையில் பயன்படுத்துங்கள்.
- ☑ பணம் ஒரு கருவி என்பதைப் புரிந்து கொண்டு கவனமாகக் கையாளுங்கள்.
- ☑ பணம் என்பது வாழ்வின் வளங்களைப் பெருக்கத்தான் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.
- ☑ உங்கள் திறமைகளைக் கூர்மைப்படுத்தும் விதமாக பயிற்சிகளில் பங்கெடுங்கள். உங்கள் முதல் முதலீடு, உங்கள் தகுதிகளை வளர்ப்பதில் இருக்கட்டும்.
- ☑ வாழ்க்கையில் வெறும் பார்வையாளராக மட்டுமே இருக்காமல் பங்கேற்பாளராக இருங்கள். வளரும் வருமானமும் பெருகும் வாழ்வை வாழுங்கள்.



## நன்றி பகர்வோம்...




கனடாத் தமிழர் இணையத்தின் அன்புக்கரங்கள் நிகழ்விற்கு வருகை தந்து சிறப்பித்த அனைத்து அன்பு நெஞ்சங்கட்கும் முதற்கண் எமது நன்றி.

கனடாத் தமிழர் இணையத்தின் அன்புக்கரங்கள் நிகழ்விற்கு ஆதரவு வழங்கிய விளம்பரதாரர்களுக்கும் வர்த்தக பெருமக்களுக்கும் எமது மனமார்ந்த நன்றிகள்.

எம் விழா தொடர்பான விளம்பரங்களை தமது ஊடகங்களினூடாக அனைத்து தமிழ் மக்களுக்கும் எடுத்துச்சென்ற CMR வானொலி, உதயன் பத்திரிக்கை, கீதவாணி வானொலி, தமிழர் செந்தாமரை பத்திரிகை, TET தொலைக்காட்சி, தளிர் ஆகியோருக்கும் எமது நன்றிகள்.

மற்றும் கலை நிகழ்சிகளை வழங்கிய நடன ஆசிரியர்களுக்கும் மாணவியர்களுக்கும் பங்கு பற்றிய அனைத்து கலைஞர்களுக்கும் எமது நன்றிகள்

மேலும் அன்புக்கரங்கள் நிகழ்ச்சிக்கு மெருகூட்டிய ஒலி ஒளி அமைப்பாளர்களுக்கும் எமது மனமார்ந்த நன்றிகள்.

விழா மலரினை சிறப்புடன் வடிவமைத்து வழங்கிய பிறைற்சன் அச்சக நிறுவனத்திற்கும் எமது நன்றிகள்.

நிறைவாக விழாவை சிறப்பாக நடாத்திய தொண்டர்களுக்கும் மற்றும் இணையத்தின் அங்கத்தவர்களுக்கும் அன்புக்கரங்கள் சார்பாக எமது நன்றியினை தெரிவித்து கொள்கின்றோம்.

